யங்காதரத்தினுரைத்தோரெனக்கென்றனாருயிரீங்
திங்காய்தனக்கொருபெண்ணீந்துயர்புகழேற்பவரோ. (௨௨௬)

நின்குறைநீயேசென்றுரையென்றல்.

விரையேயிதழியுமத்தமுஞ்சூழுறுவேணியினார்
பரையேயிடத்தினர்கோடீச்சுரேசர்பனிவரைமேல்
வரையேயெனுங்கொங்கைமின்னேசொன்மூலமறந்தவர்க்கென்
னுரையேறுமோநின்குறையாவுநீயேயுரையெதிர்ந்தே. (௨௨௭)

அலர்பார்த்துற்றவச்சக்கிளவி.

சிவன்றாதனாகிப்பரவைதன்பாலன்பிற்சென்றுவந்த
பவன்றூயசோதிதென்கோடீச்சுரவெற்பிற்பைங்கழைவில்
லவன்றாற்றலரினுக்கச்சமின்றன்னாணிகமின்றா
ரிவண்டேற்றலரினுக்கஞ்சினனாறிலனேழையனே. (௨௨௮)

ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

தன்னேரிலாவரன்கோடீச்சுரவெற்பர்சாருநம்பாற்
கன்னேர்மனங்கொண்டிருப்பதுநோக்கியுங்காதலுற்ற
வென்னேழைநெஞ்சீண்டொருக்கால்வரிற்கானிடையவர்த
முன்னேயெழுந்திக்கரக்காயுருகிடுமொய்குழலே. (௨௨௯)

காமமிக்ககழிபடர்க்கிளவி.

நறியமென்கொன்றையர்கோடீச்சுரநம்பர்நாகையிற்சங்
கெறிபெருவெங்கடலேயெனைநீயிரைத்திங்கடலே
வெறிமடிமேவிலையேயன்பரீங்கின்றுமேவிலையே
மறிதருமாமைக்கணமேசொரியுமென்மைக்கணமே. (௨௩௰)

தன்னுட்கையாறெய்திடுகிளவி.

நீறணிமேனியர்கோடீச்சுரநம்பர்நேசர்முன்போய்
கூறல்கைதாயின்றுவம்புற்றலைவாய்க்குருகிழந்து
வீறளியார்களிரங்கக்கண்ணீர்சிந்திமெய்பசந்திவ்
வாறடைந்தேதன்னையொத்தாய்பிரிந்தார்கொலுன்னன்பருமே. (௨௩௧)

தலைமகனெறிவிலக்குவித்தல்.

அரவக்கதிர்ச்சடைக்கோடீச்சுரேசரணிவரைவா
ழரவச்சிலம்படியாயன்பரெய்திலணைந்திரப்போ
ரிரவகற்றும்புகழோயகத்தேபொன்னையீட்டிவைத்திங்
கிரவதின்மேவிற்பழிப்பாம்வரல்வனத்தென்றுரையே. (௨௩௨

### தலைவிகுறிவிலக்குவித்தல்.

மின்போலுஞ்சூலத்தர்கோடீச்சுரவெற்பின்வேந்துவரிற்
பொன்போன்மறுதாளிடைக்கதிர்தோன்றினபூம்புனத்தின்
முன்போற்சுகங்கொளூப்போற்றிடப்போமெனமூந்தனையின்
றன்போடுனைத்தாள்வருவோம்வரவிங்கென்றங்குனையே. (௨௩௩)

### வெறிவிலக்குவித்தல்.

மறிகொண்டகையரன்கோட்டீச்சுரமன்னவாணுதலாய்
நெறிகொண்டமன்னர்தமைத்தொட்டுநானிங்குநீகவின்
முறிகொண்டதோர்ந்திலள்பேய்தொட்டதென்றெனைமூண்டனூர்பின்
வெறிகொண்டனளதையோர்மருந்தீந்துவிலக்குகவே. (௨௩௪)

### பிறர்விலக்குவித்தல்.

சேய்தந்தகண்ணினர்கோடீச்சுரமன்னசேயிழைநந்
தாய்தந்தையர்மணங்கொண்டெய்தளியார்தமக்கங்கென்ன
வாய்தந்திவர்கொல்லோவனையாரொன்பனைக்கருத்தை
யாய்தந்திடுதற்கிமையோரலர்நீயறிவித்திடே. (௨௩௫)

### குரவரைவரைவெதிர்கொள்ளுவித்தல்.

ஆலைக்குளிர்வயற்கோடீச்சுரநம்பரம்பொன்வெற்பிற்
சோலைக்குயின்மொழியாயன்பர்மன்றலந்துவரின்
மாலைக்குழலனையாதியராங்குமறுதிவரோ
பாலைக்குரியவொன்றேதிடென்முல்லைபடர்ந்திடவே. (௨௩௬)

### வினவியசெவிலிக்குமறைத்தமைவிளம்பல்.

நன்னித்திலநகைவாட்டங்கண்டாங்கெனைநண்ணிடனை
கன்னிக்கடுத்ததென்னென்றாள்பெருந்தகைக்காவலநா
னன்னதுலாம்புகழ்ச்சிங்கமுன்கண்ணுற்றதாகுமென்றே
னுன்னற்கரியவர்கோடீச்சுரேசருயர்வரைக்கே. (௨௩௭)

### அலரறிவுறுத்தல்.

அடியார்க்கெளியவாகோடீச்சுரேசரணிவரையின்
முடியார்மலர்க்கொம்பர்மேலுற்றின்னளிமுன்னலுறு
கடியாரிவ்வூரிலெலமையறியாமற்கணியுறுபூங்
கொடியாரிடந்தொறும்போயலருண்டாகொற்றவனே. (௨௩௮)

தாயறிவுறுத்தல்.

தவளப்பொன்னீற்றான்கோடீச்சரவெற்பதையலின்வாய்ப்
பவளம்விளர்ப்புறச்சேப்புறநீலமென்பார்வைகண்மெய்
துவளத்திகழூற்றதுகண்டனனினந்தோன்றநின்று
ளவளக்களவறிந்தாளங்குநீவந்தகன்றபின்னே. (௨௩௯)

வெறியச்சுறுத்தல்.

பெருமையுறுபுகழ்க்கோடீச்சுரேசர்பிறங்கலன்ப
வருமையுறத்தனிப்போற்றிவளர்த்திட்டவன்னையின்று
கருமையுறுங்கண்ணிணைமெலிவுற்றதுகண்டிடனே
யொருமைகொண்டிற்றதிரண்டிபங்காக்கிடவுள்ளினளே. (௨௪௰)

பிறர்வரைவுணர்த்தல்.

நின்னூர்தனக்கன்றுநீபோனபின்புநெசிவளத்தின்
மன்னூரமுத்தமிழ்க்கோடீச்சுரநம்பர்மால்வரைமேற்
பொன்னூர்வரைதனிற்கொண்டெடமர்பாவிப்புலவரொலா
நன்னூலிடையெழிற்காரிகைகேட்கநணுகினரோ. (௨௪௧)

வரைவெதிர்வுணர்த்தல்.

எட்டார்வடிவத்தர்கோடீச்சுரேசரொழில்வரையிற்
கட்டாரணியுமெமருனைக்காணிற்களிப்பினொடு
நட்டார்களாவரதன்பின்னர்நீயென்னவின்றிடினுந்
தட்டாரப்பெண்ணைத்தருவாருனக்குத்தராதிபனே. (௨௪௨)

வரையுநாளுணர்த்தல்.

கணியார்மணமலர்மாலைதந்தார்தண்கதிரவனல்
லணியார்தருகலையாவுங்கொண்டூருற்றனனரவப்
பணியார்சடையெழிற்கோடீச்சுரேசர்பணிவரைக்கண்
மணியார்செவ்வேலவமன்றல்செய்காலமருவிதுவே. (௨௪௩)

மலர்மாலை-ஒழுங்காகப் பூத்தமலர். கலை-கலை, துகில்.
ஊர்-ஊர்பரிவேடம்.

பாங்கிதலைமகளறிவுறுத்தல்.

பூமகள்வாழ்ந்திடுகோடீச்சுரநம்பர்பொன்மலையெங்
கோமகணீஇநெறியெம்மனோர்க்குக்குறித்துரைக்கு

நாமகளாயினளிப்போதப்போதுறுநாமகளுங்
காமகள்வார்மலர்த்தாரண்ணலேயுட்களிப்புறவே (௨௪௪)

குறிபெயர்த்திடுதல்.

வேதாகமம்புகல்கோடீச்சுரநம்பர்வெற்பிலங்கண்
மாதாமுன்னீயிங்குமாதாதரங்கொண்டுவந்ததனைக்
காதாலறிந்தனள்கண்ணாலறியக்கருதுகின்ற
னாதாவினிவேறிடம்பார்த்துமின்னொடுநண்ணுகவே. (௨௪௫)

பகல்வருவானையிரவுவருகென்றல்.

பகலூடிரவழைத்திட்டோன்பரவும்பரமர்திருப்
புகலூருறைபவர்கோடீச்சுரமன்னபொன்னிடத்திவ்
விகலூர்தனிற்பந்தடக்கஞ்செயலுக்கிரரச்சிறந்த
தகலூரவெல்வரிற்கண்கட்டுவித்தையறிந்தனையே. (௨௪௬)

இரவுவருவானைப்பகல்வருகென்றல்.

புகலோடரிக்கண்வளையரமாதர்பொருந்துநெறி
யகலோதிராவரல்கோடீச்சுரநம்பரம்பொன்வெற்பி
லிகலோங்குவேலவெழிற்றேசினைநீயினிப்பகல்வா
பகலோனிரவில்வருவதின்றேயிந்தப்பாரிடத்தே. (௨௪௭)

பகலினுமிரவினும்பயின்றுவருகென்றல்.

மையுறுகண்டர்தென்கோடீச்சுரமின்னின்வாயமுது
கையுறுவேலவிருபோதும்வந்துகலந்தருந்து
செய்யகதிர்மதிவாரமிராப்பகறீயதென்பர்
வெய்யபசியுடையோர்க்கொருபோதும்விலக்கிலையே. (௨௪௮)

பகலினுமிரவினுமகலிவணென்றல்.

அரும்பேயலர்ந்திடுங்காய்தரும்வேங்கையடவியினீ
வரும்பேரிரவிற்பழுக்கும்பழிச்சொல்வரிற்பகலிற்
கரும்பேய்ந்திடுவயற்கோடீச்சுரநங்கருத்தர்வெற்பிற்
சுரும்பேறியதொடையாயினியானென்சொலத்தக்கதே. (௨௪௯)

உரவோனாடுமூருமுதலியகூறல்.

இளவெண்மதிபுனைகோடீச்சுரேசரிமையவெற்ப
தளர்மின்னிடையிடைநீவளையாதுறல்சால்பலவின்

வளர்பொன்னிநாட்டிற்குநல்லூர்க்குநின்மங்கலக்குடிக்கும்
இளர்நலஞ்சாதிக்குஞ்சாதிக்கும்வாய்மைக்குங்கீர்த்திக்குமே. (உ௫௰)

ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.

சுராசுரர்போற்றரன்கோடீச்சுரவெற்பர்துன்னிரவி
லராவுறுகான்வரிலஞ்சுவரோநின்றராவெனுநீள்
கராமலையுமலையாறெளிதோசங்கராவெனுமித்
தராதலங்காக்குமன்னுவுனக்கோகைதருங்கிள்ளையே. (உ௫௧)

ஆற்றுத்தன்மையாற்றக்கூறல்.

செய்வண்டுலவுறுகோடீச்சுரநம்பர்தென்வரைவே
ளெய்வண்டுகொண்டுமின்கைவண்டுசோருமிருங்கட்கடல்
பெய்வண்டுளிகள்கொடுவண்பயோதரம்பெய்யமிற்கு
மொய்வண்டுறுதொடையாருமோதுவெனுமுன்னரசே. (உ௫௨)

காவன்மிகவுரைத்தல்.

மின்னேநிகர்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பவிங்கு
முன்னேயினன்றுவரவரக்காவன்முதிர்வடைந்த
தன்னேசிறிதுமிமையாதெப்போதுமருகுறுமெம்
பொன்னேக்களவிற்கவரவொண்ணுதினிப்புத்திக்குமே. (உ௫௩)

காமமிகவுரைத்தல்.

பொன்னகரீதிமையாரிதில்வாழ்குநர்போற்றுமத
னென்னவொளிர்மன்னநீகற்பதாருவிலகிடெங்க
ளன்னமுன்மீதுபடர்காமவல்லியணியடைந்தாள்
பன்னுமிப்போதெழிற்கோடீச்சுரோசர்பணிவரைக்கே. (உ௫௪)

கனவுநலிவுரைத்தல்.

நெய்யார்மழுவரன்கோடீச்சுரமன்னநேரிழையா
ளையாநெருநற்கனவிடைநீவந்ததுவுமவள்
கையாமலர்பற்றியிழுத்ததுமீறுகலந்திடருள்
செய்யாதகன்றதுஞ்சொல்லினைந்தாளிதென்சித்திரமே. (உ௫௫)

கவினழிவுரைத்தல்.

காரிலகுங்கண்டர்கோடீச்சுரமன்னகாரிகைமெய்
பீரிலகுற்றதகலாவெழிலும்பெரிதகன்ற

தாரிலகுஞ்சுடர்வேலோய்கிலத்திடையங்கங்குழு
மேரிலராயிடிற்சீருள ராவர்கொலேழையரோ. (உருசு)

கிலத்திடை-அங்கங்குழும்-அங்கங்கேயுழும், அங்கத்திற்கூடும், ஏரழகு-உழுமேர். சீர்-சிறப்பு, செல்வம். ஏழையர்-மாதர், ஏழையர்கள்.

தன்பதிக்ககற்சிதலைவன்சாற்றல்.

சீதளநீர்ச்சடைக்கோடீச்சுரநம்பர்திண்சிலம்பின்
மாதளவன்னநகையாளிடையென்மனமிருக்கத
தாதளவும்பொழிலெம்மூர்க்ககன்றுன்றடங்கயற்கண்
காதளவோடித்திரும்புமுன்மீள்குவன்காரிகையே. (உருஎ)

பாங்கிதலைவனைச்செலவுவிலக்கல்.

மகமேருவில்லினர்கோடீச்சுரேசர்வரையினைறவ
சுகமேநடந்திடுனக்குமுன்னூங்கமிலங்குமுன்னூ
ரகமேபிறந்திடுவோமுணர்ந்தாங்கெனணகைபூலை
முகமேலழுந்தவெளிதின்மகிழ்ந்துமுபங்குகவே. (உருஅ)

தலைவனீங்கல்வேண்டல்.

சித்தரொணக்கூட லில்விளையாடியசித்தர்பர
முத்தரம்பொன்மதிற்கோடீச்சுரமன்னமொய்குழலா
யத்தலமேகுங்குறையொன்றுளனீபருள்வைத்திங்கோ
ருத்தரம்போவெனிற்றக்கணம்போதுவனூரடைந்தே. (உருகூ)

தக்கணம்போதுவன்-அந்தக்ஷணம்வருவேன்.

பாங்கிவிடுத்தல்.

வதனமொராந்துடைக்கோடீச்சுரேசர்வரையுறநீர்
பதமுன்பெயர்க்கும்பதந்தனிலோபிற்பதந்தனிலோ
மதன்கொடுங்கோல்கொடுசெங்கோற்கடவுள்வரும்வருமுன்
கதழ்வின்வருவீரொனிலேகலாகுமெங்காவலரே. (உசும)

பாங்கிதலைவிக்குத்தலைவன்செலவுணர்த்தல்.

வணக்கொன்றைசூடரன்கோடீச்சுரமன்னவாணுதலா
டணக்கிங்குநம்பிரிவாற்றுதொருகணந்தானுமெண
வெனக்குத்தெரியுந்தெரியுமெனக்கெனவென்மனந்தே
ருணக்குத்தெரியுமன்றேயென்றவ்வூர்க்கவரூற்றனரோ. (உசுக)

தலைவிநெஞ்சொடுபுலத்தல்.

நாளானவைகளிற்கோடீச்சுரேசர்நகத்திறைபொய்ச்
சூளார்மணத்தோடுறவாய்ப்பிரிந்துழித்துன்பமதி

னீளாதுகல்லாயிருக்கக்கல்லாதுநினைவழிந்து
வாளாவெனைநீவருத்தலென்னிங்குமடநெஞ்சமே. (உசுஉ)

சென்றோனீடலிற்காமமிக்ககழிபடர்கிளவி.

புலமெய்த்தவர்புகழ்கோடீச்சுரேசர்புகலியின்பாற்
குலவுப்படுகரையேகண்டிலாய்கொலென்கொண்கனையே
நிலவுற்றிடுதினையேயறியேன்சற்றுநித்திரையே
சலமுற்றிடுசங்கமேயுறுமோவன்பர்தஞ்சங்கமே. (உசுங)

பாங்கியிறைவியையாற்றுவித்தல்.

இளர்புகழ்வேந்தர்வருகின்றனருன்றன்கேதமெலாந்
தளர்வுறச்செய்திடுநீதளரேல்மின்றனரிடையாய்
வளர்பிறைநாளும்வளராதிருக்கவளர்சடைமேற்
களவெம்பணியுய்த்தகோடீச்சுரவள்ளல்கார்வனைக்கே. (உசுச)

தலைவிக்கிறையோன்வந்தமையுணர்த்தல்.

பேராயிரத்தான்கோடீச்சுரவெற்பிற்பேரொழில்கொ
ளாராரயின்மன்னராராநின்னெஞ்சகத்தார்வமதைத்
தேராதவரல்லர்தேராதவன்கடற்சென்றனன்மேல்
வாராரொன்றேங்கிடல்வாராரிளமுலைவந்தனரே. (உசுரு)

பாங்கிதலைவனொடுநொந்துவினாதல்.

தன்னொடுதானுறழ்கோடீச்சுரேசன்றனதருளான்
மின்னொடுநாணும்பிழைத்திருக்கின்றனண்வேலவநீ
யென்னொடுகூறியகாலமெல்லாஞ்சென்றதெவ்விடத்தோ
வுன்னொடுகூடியிருந்ததன்றேயங்ஙனுன்னெஞ்சுமே. (உசுசு)

தலைவன்பாங்கியொடுநொந்துவினாதல்.

கூற்றினைவாட்டியகோடீச்சுரேசர்குவட்டிளமான்
றேற்றியமாரனலருமிவ்வூரினர்தூற்றலருஞ்
சாற்றிடுதிங்கள்வந்தீயும்வெந்தீயுந்தனியிருந்திங்
காற்றியதெப்படியெப்படியாற்றுவித்தாயண்ணங்கே. (உசுஎ)

பாங்கியாற்றுவித்திருந்தமைகூறல்.

கருந்தாழ்குழலியெங்கோடீச்சுரேசர்கருந்தடத்தில்
வருந்தாமலின்றுவருந்தாமமார்பன்வருந்தலென்று
மிருந்தார்ப்பொழிற்புள்ளிருந்தாலுமுன்னாவொதிர்தெரித்தும்
பொருந்தார்ப்பொருந்தனிவேலவிற்போற்றியும்போற்றினனே (உசுஅ)

என்பொருட்பிரிவுணர்த்தேந்திழைக்கென்றல்.

நனைவிடைப்பாகர்தென்கோடீச்சுரமன்னநன்னுதலாய்
வனைவிடைவைத்துப்பொருட்கேகுவேன்மென்மனமுருகிக்
கனைவிடைநூலன்னகன்னியுற்றுளென்கதழ்வணைபாட்
குனைவிடைதந்திடுவந்திடுவேனிதியுன்னிடத்தே. (உசுகூ)

நின்பொருட்பிரிவுரைநீயவட்கென்றல்.

வடவிழ்தாமரைக்கண்ணனுங்கண்ணனுமின்னலுற்றுத்
தேடமுன்னின்றவர்கோடீச்சுரேசர்சிலம்பிறைவ
நாடக்கரகசபைக்கேகிடினீநறுநுதலைக்
கூடவழைத்தேகலேயேனுமேகலைக்கூறவட்கே. (உஎ0)

நீடேனென்றவனீங்கல்.

கனமுறுங்கண்டர்தென்கோடீச்சுரவெற்பிறகாரிகையென்
மீனமுறுமுற்சந்தனமுறுமச்சந்தனமனுமுற்
றனமுறுமத்தந்தனமுறிலத்தந்தனவிடையா
ளினமுறுமுத்தந்தனவிலேக்காமிங்ஙனெய்துவனே. (உஎக)

பாங்கிபொருட்பிரிவுதலைவிக்குணர்த்தல்.

இருகோடிவையென்முலைவிலைக்காகவிறைவர்முதல்
வருகோடினம்பணிகோடீச்சுரநம்பர்மால்வரைவி
னருகோடியுச்சியிலாவதுமாலையிலாவதிங்ங
னொருகோடிபொன்கொண்டணைகுவன்கோடியென்றுற்றனரோ. (உஎஉ)

தலைவியிரங்கல்.

மின்னனவேணியர்கோடீச்சுரேசர்வியன்சிலம்பின்
மன்னவரொன்றனைப்பித்தனையென்றுவரைந்துதனிப்
பொன்னினுக்கேகினரொன்னுயிர்வேளம்பிற்போனபின்வந்
தன்னதையார்க்களித்தாருடன்வாழ்வரிங்கன்புடனே. (உஎங)

பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்.

கண்டார்கலுழ்தற்குக்காரணந்தேர்ந்திடக்கண்கலக்கங்
கொண்டாயிதுவென்னகோடீச்சுரேசர்குவட்டிறைவர்
வண்டார்குழலியெனக்கோபிறர்க்கோவரையுனக்கோ
மண்டாரழற்சுரஞ்சென்றார்பொருட்குவருந்துயரே. (உஎச)

தலைவிகொடுஞ்சொற்சொல்லல்.

பாருயிராம்புனறீவளிவானம்பரிதிமதி
யாருயிராம்பரன்கோடீச்சுரவணங்கேயெளியேற்
கிருயிரோருயிரீருயிராயதெனைப்பிரிவுற்
றோருயிர்நீயென்றிருந்தனனீயதையோர்கிலையே. (௨௭௫)

வருகுவர்மீண்டெனப்பாங்கிவலித்தல்.

மலைகண்டவில்லினர்கோடீச்சுரசித்தர்மால்வரைமேற்
கொலைகண்டவேற்கண்ணளிகாண்வெயிலாற்றுயர்கூர்பிணையி
னிலைகண்டுருகியருகினின்றேதன்னிழலுதவுங்
கலைகண்டிடிற்பொருட்கேகுவரோகலைகண்டவரோ. (௨௭௬)

பருவங்கண்டுதலைவிபுலம்பல்.

சேராரொணக்கறுத்தார்த்தம்புகொண்டுசிலைவளைத்துக்
காரானதுவந்தெதிர்ந்ததன்றோர்வரக்கண்டிலன்யான்
றேரார்கொலோவிதையாங்கித்திசைதேர்திரும்பிலையோ
தாரார்கடுக்கையர்கோடீச்சுரேசர்தடங்கிரிக்கே. (௨௭௭)

இகுளைவம்பென்றல்

கயிலாயநாதர்தென்கோடீச்சுரத்துன்கருங்குழலி
னியலானதற்கஞ்சியோடியகாரிவ்விடைத்தனிநீ
பயில்வாய்ந்துசற்றுப்பயங்காட்டவந்ததுபார்த்ததையிம்
மயிலாடுகின்றதுகார்காலமன்றிதுவம்பணங்கே. (௨௭௮)

தலைவிமறுத்தல்.

நகைமுலைகாரன்றிதோமப்புகையெனிநன்கிசைத்தாய்
புகைதனைக்கண்டுமயிலாடுமோகொன்றைபூத்திடுமோ
தகைதருகோபமுறுமோவதுவிற்றரித்திடுமோ
திகையணியாடையர்கோடீச்சுரத்துத்திகைத்தனையே. (௨௭௯)

அவர்தூதாகிவந்ததிப்பொழுதெனத்துணைவிகூறல்.

தந்தேரிடையன்பர்தந்தேரிடையுறத்தாமிவர்ந்து
வந்தேனுனக்குமுன்னுமின்னார்க்கென்வரவுணர்த்து
முந்தேகியென்றுநம்பாலவிடுத்தாரிம்முகிலைநையேல்
பந்தேற்றகையுமைபங்கர்கோடீச்சுரப்பைந்தடத்தே. (௨௮௰)

தலைமகளாற்றல்.

ஊரும்விடையான்கோடீச்சுரமெனுமூருறையு
மோருயிரீருடற்கெவ்வாறலையுமொவ்வோரனாயாய்ச்
சாருமென்றுலுங்குறைப நிமேயெனுஞ்சால்புணர்ந்து
தேருடன் மீண்டுமுற்றூதும்வட்டாரவர்தோர்ந்தவரோ. (உஅக)

அனைவட்புலம்பல்.

கூடலிலழத்ததிற்கண்ணீர்சொரிந்துகுறிப்பொருநா
ணீடல்கண்டேங்கிவரிக்குறிபார்த்தின்றுநெஞ்சுருகி
வாடலுற்றுங்குநந்தேர்வரனோக்கிமயங்கிடுமே
யாடல்புரிசிவன்கோடீச்சுரத்துநம்மாருயிரோ. (உஅஉ)

பாகனொடுசொல்லல்.

விடையூருமத்தர்தென்கோடீச்சுரத்தர்தம்வெற்பிலிவ்வான்
கடையூருங்கொண்டல்சொரிநீருமின்னதைக்கண்டமின்கண்
மடையூருநீரும்பெருவெள்ளமாகிவழியதனி
விடையூறதாமுன்வலவாசெலுத்திடிரதத்தையே. (உஅங)

மேகத்தொடுசொல்லல்.

இல்லென்றவர்க்கருள்கோடீச்சுரநம்பரோமவெற்பிற்
செல்லென்றுனையறிந்தோர்சொல்லநீமுன்னர்ச்செல்லுகின்றாய்
நில்லென்றுநான்சொலினிற்பைகொல்லோசென்றுநேர்முகிலே
வல்லென்றகொங்கைவருந்தாதுணைநான்வருந்திறனே. (உஅச)

பாங்கிவலம்புரிகேட்டவன்வரவறிவுறுத்தல்.

கைச்சங்கம்போயிற்றெனமெலியேலிங்ஙன்காவலர்தம்
மெய்ச்சங்கால்கிடமேவுகின்றானமேன்மதுரா
யச்சங்கத்தேதமிழாய்ந்தகோடீச்சுரத்தாதிவெற்பி
லிச்சங்கம்வந்துன்களத்துறவேற்பவிசைக்கின்றதே. (உஅரு)

தலைவிவலம்புரிவாழ்த்தல்.

தொண்டானவர்க்கருள்கோடீச்சுரம்பர்துாய்வரைச்செல்
லொண்டார்புனையன்பர்திண்டேர்வரவெனக்கோதியெனைத்
தண்டாதலைக்குந்துயர்ச்சங்கமாற்றியசங்கமினி
வண்டாமரைக்கண்ணர்கைச்சங்கமாகிவயங்குகவே. (உஅசு)
(உஅஎ)

பாங்கிகினைத்தமைவினுதல்.

நடத்தொழிற்றில்லைப்பொதுவிற்செய்தாண்மலர்நாளுமென்னெஞ்
சிடத்துறச்செய்பரன்கோடீச்சரவெற்பிலின்புறநல்
வடத்திருமார்பவெப்போதெனுமாங்குன்மலரகப்பூந்
தடத்தெங்களன்னையணைந்தருண்டோவுண்மைசாற்றுகவே (உஅஎ)

தலைவனினைத்தமைசெப்பல்.

எனைத்தன்னடிமையெனத்தடுத்தாண்டருளீசர்வரி
கனைத்துலவும்பொழிற்கோடீச்சரமின்கருதுமென்னெஞ்
சினைத்தன்றனைத்தொருவார்கொண்டிருக்குமற்றிங்குவைத்தா
னினைத்திடற்கென்னசெய்வேனினைத்திலனேரிழையே. (உஅஅ)

பாங்கிதலைவியையாற்றுவித்திருந்தமை கூறல்.

மின்னனவேணியர்கோடீச்சுரேசர்தம்மெய்ம்மையரு
ளென்னனுபானத்திலுன்புகழ்மாத்திரையின்னள்செவி
மன்னவுரைத்துட்கொளச்செய்துமன்னவமன்மதன்செ
யின்னலிறுவித்திருந்தனணித்திறமிங்ககரோ. (உஅகூ)

தலைவன்முலைவிலைவிடுத்தமைபாங்கிதலைவிக்குணர்த்தல்.

தந்தனநேரிடைபாகர்தென்கோடீச்சுரத்தடத்துத்
தந்தனமெல்லையிங்கில்லாதனகின்றனவிலையாத்
தந்தனரன்பர்மற்றிந்நாளினிநீதவிர்த்திடுவி
தந்தனநீடியசொல்லாமணம்பெறுதாழ்குழலே. (உகூய)

தலைவிநற்றாயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

வேலையன்றுதைதென்கோடீச்சரவெற்பின்மேவுமன்னை
யாலைவில்வேளனையாருக்குநங்கையிலுலையுறு
மாலைபுனைந்திடும்போதுமன்னோர்கிளைமாலையினங்
காலையங்கைப்பற்றுகாலையுமுள்ளங்களித்திடுமே. (உகூக)

பாங்கிதமர்வரைவெதிர்ந்தமைதலைவிக்குணர்த்தல்.

வேழத்துரிபுனைகோடீச்சுரேசர்விரும்புமெழிற்
சோழநன்னாட்டன்பர்முன்னோர்நல்வேலையிற்றுன்னியுய
ரீழமுநீடிகலிங்கமுமன்றறகியந்துவைப்ப
யாழனசொல்லிதந்தார்நமரோற்றனரின்புறவே. (உகூஉ)

தலைவியுவகையாற்றாதுளத்தொடுகிளத்தல்.

அனமேவுறுவயற்கோடீச்சரநம்பரப்பொன்வெற்பின்
மனமேவருந்தலிறைவர்வந்தார்நன்மணஞ்செயவித்

தினமேயடைக்குமலர்தூற்றிமூர்ச்சிறுமியர்வாய்
சினமேவியமதன்றேரோடலைவன்றெருவெங்குமே. (உகூங)

பாங்கிதலைவனைவாழ்த்தல்.

இன்னாடியருமதுபார்த்தயருநம்மி னலுமேன்
மன்னாதுவந்திங்கொருமாத்திலாதனின்மாற்றிறையிம்
மின்னாள்கைப்பற்றியவ்வள்ளியுஞ்சேயுமுன்மேவவெனப்
பன்னாளும்வாழ்கதென்கோடீச்சுரேசர்பணிவனாக்கே. (உகூச)

மணம்பொருட்டாகவணங்கைப்பராநிலைகாட்டல்.

முன்பார்சிவன்றிருக்கோடீச்சுரவெற்பமுத்தநகைப்
பொன்பாவிழையுன்மணம்பொருட்டாகப்புகழணங்கை
யன்பான்மலர்தூஉய்ப்பலியோச்சிப்போற்றியருகினின்று
தென்பாலெழுங்கோகிலமொழிகேட்குந்திறத்தினையே. (உகூரு)

அதுகண்டோன்மகிழ்தல்.

வின்னாணரவினர்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்தி
லின்னாண்மணம்பெறநாம்வேண்டவேண்டிலங்குமிழ்நண்
மன்னாவல்கொண்டெதிர்நின்றலர்தூஉய்நம்மணப்பொருட்டிப்
பொன்னாரணங்கைபராவனம்மேலவர்புண்ணியமே. (உகூசு)

கையறுதோழிகண்ணீர்துடைத்தல்.

அருங்கயிலாயத்தர்கோடீச்சுரமன்னவாயிழைநின்
னிருங்கதலிப்புறநின்றிடுகாந்தளொழின்மலரின்
மருங்குறுசெய்யகமலத்தலர்ந்தமலர்க்குவளை
கருங்குளிர்முத்தந்தருந்திறனென்னதுகட்டுரையே. (உகூஎ)

துடையாகியகதலிப்புறத்து நிற்கின்றகாந்தளாகிய கையின்மீதுற்ற தாமரையாகிய முகத்துக்கு வளையாகியகண் - முத்தம்போலநீர்த் துளிகள்.

தலைவிகலுழ்தற்காரணங்கூறல்.

தார்வார்தருசடைக்கோடீச்சுரநம்பர்தாரவெற்பைச்
சேர்வாரத்தென்றனைச்சேர்வாரமன்னர்சிறிதுநன்மை
யார்வார்தரமுன்றனக்கிழைத்தாரொன்றன்னாக்கண்டு
நீர்வாருமென்றிடநீர்தனையேவுநெடுவிழியே. (உகூஅ)

தெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமைகூறல்.

வெஞ்சமர்ச்சூற்படைக்கோடீச்சுரவள்ளல்வெற்பரினி
யஞ்சலுனைப்பிரியேனெனத்தேனின்முன்னுங்குனைத்தல்
வஞ்சகமென்பதறியேனிதுவனைமற்ற னை
யஞ்சனம்பார்த்தகண்ணெஞ்சிற்குமோதியழிகின்றதே. (உகக)

தலைவிதலைவனிகந்தமையியம்பல்.

வேதாந்தமேவியகோடீச்சுரசித்தர்வெற்பரெனக்
காதாரமானவராதாரமென்பதகங்குறியார்
தாதார்பொழிலிடைத்தாம்புணர்ஞான்றங்குத்தாழ்ந்திருந்த
போதாகரிசொல்லப்போதாவெனநகர்ப்போயினரோ. (கூா)

அதுகேட்டபாங்கியியற்பழித்தல்.

நல்லார்தொழுந்திருக்கோடீச்சுரத்துறைநம்பர்வெற்பின்
வல்லார்முலையந்தவல்லாளர்க்குன்றன்மனமருவு
வில்லாரழன்முன்மெழுகொத்துருகிமெலிதலுறுங்
கல்லார்மனமெனக்கல்லாயிருக்குமக்காவலர்க்கே. (கூாக)

தலைவியியற்படமொழிதல்.

வள்ளம்புலிபுனைகோடீச்சுரேசர்வரைத்தண்பொன்னி
வெள்ளஞ்சிலதினந்தாழினுயாங்குடன்மேவிப்பைங்கூ
ழுள்ளங்குளிர்ந்திடப்பாய்வதுபோலன்பரொண்டொடிநான்
கொள்ளஞர்நீக்கிப்புரப்பான்கருதிக்குறுகுவரோ. (கூாஉ)

தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்.

சொரிவள்ளருளரன்கோடீச்சுரவெற்பர்சூளுனைத்துப்
பிரிவண்ணினரொன்றவர்பால்வெகுளேல்பிரிந்திடினும்
பரிவதெம்பாலுளர்தென்னேரகத்துப்பரம்பொருளே
விரிவடிவேலவென்றேத்துவம்வாசென்றுமெல்லியலே. (கூாகூ)

தலைவியில்வயிற்செறித்தமையியம்பல்.

விடவாளரவணிகோடீச்சுரவள்ளல்வெற்பிலிவ்வூர்
மடவார்கடூற்றுமலரையுமென்றுயர்மாலையும்பார்த்
தடல்வாள்விழிசிவந்திம்மனைநீங்கலென்றம்மனைவன்
றடவார்முலைத்தையலாய்முன்புறவெனைச்சாற்றினளே. (கூாச)

செவிலிகனையிருளவன்வரக்கண்டமைகூறல்.

மாலொருபாகர்தென்கோடீச்சுரந்தனைவாழ்த்திறைவர்
வேலொடுநென்னலிரவிற்குறியுற்றுமீண்டுசெலுங்
காலொருகள்வனிங்கேகலுற்றானென்றுகைந்நெரித்தாள்
பாலொடுதேனன்னசொல்லாயனைநான்பயந்தனனே. (௫௱௫)

ஏறிவளைவேற்றுமைக்கேதுவினவல்.

நெய்திகழ்சூலத்தர்கோடீச்சுரம்வாழ்நிருத்தர்வெற்பிற்
பொய்திகழ்நேரிடையாய்புனநீத்திங்குப்போந்தபின்மின்
மெய்குழையுற்றதெனைம்பால்சரிகொண்டுமென்கைவெறி
தெய்திடக்கங்கணங்கண்கொண்டதென்னீதெனக்குரையே. (௫௱௬)

கூந்தல்சரிந்து-கைவளைபோய், வெறிதாக. கங்கணம-நீர்த்துளி.

பாங்கிவெறிவிலக்கல்.

தோட்டுக்குளிர்பொழிற்கோடீச்சுரத்துறைசோதிவரை
வேட்டுக்குறவர்கள்பல்லோர்முனென்னைவெகுளலன்னே
காட்டுக்குள்வாழிவ்வணங்கையுங்கேளொருகாலத்துமிவ்
வாட்டுக்கும்பாட்டுக்கும்போகாதுமங்கையருந்துயரே. (௫௱௭)

வெறிவிலக்கியவழிசெவிலிவினாதல்.

காதார்குழையரன்கோடீச்சுரவள்ளல்காதலனை
வேதாவைவெஞ்சிறைவைத்தோனைநாங்கண்மிகப்பணிந்து
போதார்குழலிதுயர்தீர்க்கும்போதிங்குப்போந்தணங்கே
நீதான்றடுத்ததென்னீதாமென்றேதுநெறியிதற்கே. (௫௱௮)

பூத்தருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

நின்னடிநோக்கிப்பயமுற்றுநீடுகண்ணீருடனே
பன்னுமிப்போதங்கிருந்ததினைக்கண்பார்த்திடெனக்
கன்னலஞ்சொல்லிகைத்தந்தாளொருவன்முன்கார்ப்புனத்தோன்
றின்னதறிகுவன்கோடீச்சுரேசரிமையத்திலே. (௫௱௯)

புனறருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

மன்றினுளாடல்செய்கோடீச்சுரநம்பர்மால்வரைப்பா
லன்றொருநாளணங்கன்னாரொடும்விளையாடிடுங்கால்
மன்றற்குழலம்முனிபோலப்பொன்னிவலஞ்சுழிவாய்ச்
சென்றிடல்பார்த்துற்றெடுத்தளித்தானொருதிண்ணியனே. (௫௱௰)

அம்முனி-அந்தவேரண்டமுனிவன்போல.

களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

அங்கைக்கனலரன்கோடீச்சுரவெற்பிலஞ்சிமுன்செல்
வெங்கைக்களிறென்றுமெல்லியலாடனிமேவல்கண்டு
கொங்கைக்களிறெறிபோர்க்குறல்பார்த்ததிற்கூடொருவன்
செங்கைக்கதிர்வேனெறிந்தலட்காத்தன்னசேயெனவே. (௩௧௧)

தலைவிவேற்றுமைகண்டுநற்றாய்செவிலியைவினாதல்.

பொன்னகங்கோட்டரன்கோடீச்சுரமன்னபூங்கொடிமெய்
னென்னலுக்கின்றுமெலிந்ததவிர்ந்ததுநீள்பசலை
துன்னருங்கைவளைகாணேன்விழிப்புனல்சோர்வுகண்டே
ளின்னளிவ்வின்னலிங்கெய்வதற்கேதெதுவின்னகையே. (௩௧௨)

செவிலிநற்றாய்க்கறத்தொடுநிற்றல்.

சினங்காலுமேற்றரன்கோடீச்சுரமன்னசேயிழையாய்
புனங்காவல்செய்திடும்போதொருநாளங்குப்போந்தெனது
மனங்காண்கிலேனதைக்காட்டுதியென்றொருமானவனின்
னனங்காமுறுநடையாண்மனங்கைக்கொண்டகன்றனனே. (௩௧௩)

நற்றாய்தமருக்கறத்தொடுநிற்றல்.

மருத்தண்கடுக்கையர்கோடீச்சுரவெற்பில்வாழ்குவிர்நம்
முருக்கனவூரன்முதுக்குறைந்தாளினிமுன்னுமவள்
கருத்துக்கிசைந்தகருத்தற்குநல்குமின்கந்தனுக்குத்
திருத்தகுவள்ளியைமுன்னீந்துவந்ததிறமெனவே. (௩௧௪)

பாங்கிதலைவற்குடன்போக்குணர்த்தல்.

விண்மதிசூடரன்கோடீச்சுரவெற்பின்மேவரசே
வன்மதயானைபலதந்தியாயினும்வண்குறவர்
மென்மடமானையளிதினல்காரிருள்வேலைவெள்ள
நின்மதில்சூழூர்க்குடன்கொண்டுசெல்கென்னினைவிதுவே. (௩௧௫)

தலைவனுடன்போக்குமறுத்தல்.

ஏயுஞ்சுடர்க்கண்ணார்கோடீச்சுரமின்னிடைகடத்திற்
பேயுஞ்சுழல்கட்புலியுமுலாமதன்பேருணாத்தால்
வாயுஞ்சுடுமெண்மணமுஞ்சுடுமிகமற்றதனி
லாயுஞ்சுடர்த்தொடியன்னமுன்னெவ்வாறடிவைப்பதே. (௩௧௬)

பாங்கிபோக்குடன்படுத்தல்.

மாலையன்போற்றிடுங்கோடீச்சுரசித்தர்மால்வரைக்க
ணாலையணங்கனெப்பாயுன்னுடனடந்தாலனைய
பாலையிற்கள்ளியங்காடும்வெங்காலும்படர்தழலுஞ்
சோலையுந்தென்றலும்வாவியும்போலுந்துடியிடைக்கே. (௩௧௭)

தலைமகன்போக்குடன்படிதல்.

கருந்திருக்கண்டர்தென்கோடீச்சுரமன்னகன்னிதனிப்
பருந்துபறக்குமிழலூர்செல்லும்பருந்தழற்கான்
வருந்திறமில்லள்வருந்திடுமென்றென்மனந்தடுக்கும்
பொருந்தினனின்சொற்றடுக்காதுநான்கொடுபோவதற்கே. (௩௧௮)

பாங்கிதலைவிக்குடன்போக்குணர்த்தல்.

உன்னிடமேவரன்கோடீச்சுரவெற்பாநங்கள்கன்னி
பன்னிடுவேளைப்பணிவதல்லாதந்தப்பாலையுறு
கன்னியைக்கண்டுபணிந்திலளேயெனக்கட்டுரைத்தார்
முன்னியதோர்ந்திலன்பின்னியநாண்மலர்மொய்குழலே. (௩௧௯)

தலைவிநாணழிவிரங்கல்.

கனத்தினைநேர்கண்டர்கோடீச்சுரவெற்பின்கண்ணுறுமென்
றனத்துடன்றோன்றியென்கண்மணிபோலத்தணத்தலின்றி
மனத்துணையாகியிருந்திடுநாண்முன்மதிநுதலாய்
வனத்திடைச்சென்றதுநானேகுவேனிறைவன்பினென்றே. (௩௨௰)

கற்பின்மேம்பாடுபாங்கிகூறல்.

தேனாட்டுகொன்றையர்கோடீச்சுரசித்தர்தென்சிலம்பின்
பானாட்டினைவிட்டுப்பானாட்டுமென்மொழிப்பாவைவெம்முட்
கானாட்டுங்கானுஞ்செலவோர்பெரிதன்றுகற்புடையோர்
வானாட்டினுஞ்செல்வரித்தேயம்விட்டுமகிழ்நர்பின்னே. (௩௨௧)

தலைவியொருப்பட்டெழுதல்.

வன்னெஞ்சிடத்தகல்கோடீச்சுரேசர்மணிவரைக்கண்
மின்னெஞ்சுறுமிடையாய்நீயெழுதுயர்வேலைவிட்டென்
றுன்னெஞ்சக்காவலர்தந்நெஞ்சுங்கூடியிங்கோதிடுங்கா
லென்னெஞ்சமாறுசொலுமோவதுவுமிசைக்கின்றதே. (௩௨௨)

சுரத்தியல்புரைத்தழிச்சொல்லல்.

நீங்காவலர்மழைதன்றொடுதாய்சின நீள்கடலிற்
பாங்காழுழுகியவெம்மையைப்பாலைப்படுதழற்கட்
போங்காலகற்றிநங்கோடீச்சுரேசர்புகழ்வரைக்க
றெங்காதாவுற்றிருப்பேன்பின்னீயுமணையணங்கே. (௱௨௩)

கையடைகொடுத்தல்.

பம்பாலடியுறைகோடீச்சுரவள்ளல்பைம்பொன்வெற்ப
கொம்பாமருங்குலுக்காவியுநாளுங்கொழுநனுநீ
நம்பாவருமின்னவடனைக்காத்தியிந்நாளினின்று
னம்பாலொருபாலுருவானபோதினுமன்புவைத்தே. (௱௨௪)

பாங்கிவைகிருள்விடுத்தல்.

சொன்றொடுபூவையையீவார்கையிந்தன்னைதுன்பகற்றி
முன்றாழலினலர்தூற்றும்வாய்களைமூடியுங்கள்
பின்றுவடியைப்பிடியாவருவேன்பிடிநடைமூன்
கொன்றேர்கணிச்சியர்கோடீச்சுரந்தனைக்கூடுகவே. (௱௨௫)

தலைவன்சுரத்துய்த்தல்.

வெண்டிருநீற்றரன்கோடீச்சுரவெற்பில்வெவ்வெயின்முன்
வண்டுகில்சென்னியிற்சேர்நுதலார்வெயர்மாற்றிடுகான்
மண்டழற்கல்லினிடருறுமெல்லெனவாநிழன்மேற்
கண்டுழிவைகுவங்கண்டதைப்போலுங்கனிமொழியே. (௱௨௬)

தலைமகன்பொழில்கண்டுவியத்தல்.

இருக்கோலிடும்புகழ்க்கோடீச்சுரவிறையின்னருளாற்
பெருக்கோகைமேவக்கழிப்பாலைப்பாங்கர்ப்பெருமணஞ்சார்
திருக்கோலக்காவெதிர்கண்டேமிதில்வைகிச்சென்றிடுமென்
றுருக்கோகிலமுன்னழைக்கின்றதுநமையொண்டொடியே. (௱௨௭)

அசைவறிந்திருத்தல்.

கொடியிடையேற்றான்கோடீச்சுரநேர்கொடியிடைநின்
னடிமலர்சேந்ததுமெய்யோதுவண்டதணிநுதல்வேர்
வடிதருகின்றதகன்மணற்சூடழன்மண்டியதிக்
கடிமலர்க்காவிலுறைவோந்துயரங்கடியளவே. (௱௨௮)

உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்.

சிவந்தபொன்மெய்யரன்கோடீச்சுரமன்னசேயிழைநா
ணவந்தருபாலைத்துயர்தீர்ந்திடநின்னடிபிடித்திட்
டுவந்தலர்சூட்டியவோதியைப்பார்த்தென்கண்ணேறிடுமா
லிவந்திடிங்கோர்பொழிற்பூந்ததுபோன்றென்னெஞ்சினுக்கே. (௩௨௯)

கண்டோருயிர்த்தல்.

வருவார்பரன்றிருக்கோடீச்சுரந்தனில்வாழ்பவரோ
மருவார்தருவிண்ணுலகினரோவிஞ்சைவல்லவரோ
வுருவார்மதனுமிரதியுமோவொன்றுமோர்ந்திலமால்
வெருவார்சுரத்துறவேதோநிமித்தமிம்மேலவர்க்கே. (௩௩௰)

கண்டோர்காதலின்விலக்கல்.

மலைவில்லரன்றிருக்கோடீச்சுரந்தனைவாழ்த்தலர்போன்
றலைநீப்பவன்மேற்கடலாழ்ந்தனனூரருகினியிண்
டிலைமற்றிவளுமெலிந்தாளிரவெம்மிலைமருவிக்
கலையினுரியிற்றுயின்றெழுந்தேகையகலையிலே. (௩௩௧)

கண்டோர்தம்பதியணிமைசாற்றல்.

குன்றிதுதன்னைக்கடந்துசென்றாலெதிர்கோபுரமு
மின்றிகழ்மெல்லிடையார்விளையாடுபொன்மேடைகளுந்
துன்றிணர்ச்சோலையுமாகிவில்வேலவதோன்றுந்தில்லை
மன்றினுளாடல்செய்கோடீசனேரண்டமாபுரமே. (௩௩௨)

தலைவன்றன்பதியடைந்தமைசாற்றல்.

இதுதான்சிவன்றிருக்கோடீச்சுரமிதிலேதான்றேர்
விதுவைக்குறைபடச்செய்ம்முகத்தாய்துகின்மென்கொடிநீ
டதுநம்மனையிதுவேதியராவணமாவணமீ
துதுதண்கமலத்தடமிதுகாவிரிபொன்னதியே. (௩௩௩)

செவிலிபாங்கியைவினாதல்.

சாற்றாயெனக்குண்மையெங்கேகினாள்வஞ்சிதண்சுனைக்கோ
மேற்றாதுகுமலர்ப்பைம்பொழிற்கோவிங்குமென்கிளிகூஉய்த்
தோற்றுகுன்முறவாரழைத்தேகினர்தூயவிடை
யேற்றார்கொடியரன்கோடீச்சுரமன்னவேந்திழையே. (௩௩௪)

பாங்கிசெவிலிக்குணர்த்தல்.

மருதவனத்துறைகோடீச்சுரநம்பர்மால்வரையாம்
பருவண்குறிஞ்சியினெய்தலுற்றாறியிற்பாங்கினுட

னொருதண்மலர்முல்லையாலைதந்தான்றனுடனடந்தாள்
கருதுமின்பாலைகலங்கவிழ்த்தாரிற்கலங்கனேயே. (௫௫௫)

செவிலிதேற்றுவோர்க்கெதிரழிந்துமொழிதல்.

நெருங்கிதழ்க்கொன்றையர்கோடீச்சுரசம்பர்நேரியினன்
மருங்குவைத்தான்மருங்கென்றுரமேற்றிவளர்த்தமயில்
சுரங்கொண்டிடமருந்தீந்தெதிர்பண்டிதஞ்சொன்னவனைக்
கருங்குழலீரிங்கறியேனெளியேன்கலங்கினனே. (௫௫௬)

செவிலிதன்னறிவின்மைதன்னைநொந்துரைத்தல்.

ஓங்கருளீசர்தென்கோடீச்சுரவெற்புறையுமலர்த்
தேங்கமழ்கோதையிரொன்சொல்லுவேன்றளிர்ச்சீறடிமுன்
வேங்கடநல்லதலங்கொலென்றுண்மிக்கமென்மைமத்தென்றே
றாங்கவனெண்ணமுய்த்தோர்ந்திலன்சென்றுளருஞ்சுரமே. (௫௫௭)

செவிலிதெய்வம்வாழ்த்தல்.

அன்னோர்மிடற்றினர்கோடீச்சுரேசருண்மதலாய்
தென்னோரகமன்னகன்னோரகங்கொடுசென்றவள்வந்
தென்னோரகமுறச்செய்தனையேலும்மெனதிர்சிறகவோர்
மன்னோர்மயில்விடுத்தெந்நேரமுமுனைவாழ்த்துவமே. (௫௫௮)

செவிலிநற்றாயககறத்தொடுநிற்றல்.

வேலைநஞ்சுண்டவர்கோடீச்சுரமன்னமெல்லியலாய்
காலையிற்சார்ந்திதையுச்செயிர்சூடெனக்கையிலொரு
மாலைதந்தானொருமாலையொப்பானதைவாங்கிநந்தம்
பாலையப்பாலையிடத்தாங்கவள்பின்படர்ந்தனளே. (௫௫௯)

நற்றாய்பாங்கியொடுபுலம்பல்.

புகழிற்பெரிதுறுகோடீச்சுரேசர்பொருப்பிடத்து
நிகழிங்கொருவன்றன்மாலையுற்றுளிவணீடெனவே
திகழிக்குறிப்புமுன்னீயுரைத்தான்மணஞ்செய்தவற்கே
மகளியனுக்கிவிடுவேன்கெடுத்தாய்மடமகளே. (௫௬௦)

பாங்கியொடுபுலம்பல்.

தாரிருந்தார்சடைக்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பின்
வாரிருந்தாரம்புனைமுலையீரந்தமன்னிருந்தெ
ளரிருந்தாலென்னிளமானடைந்தவருஞ்சுரத்தி
னீரிருந்தாலிங்கிவ்வாறலையாதென்றனெஞ்சகமே. (௫௬௧)

### அயலாரொடுபுலம்பல்.

விண்பெற்றகீர்த்தியர்கோடீச்சுரநித்தர்வெற்புறுமென்
பண்பெற்றசொல்லியெனைவிட்டுப்போற்றியபாவியைவிட்
டெண்பெற்றவன்பின்னடந்தாண்மகிழன்மினேந்திழையீர்
பெண்பெற்றபோதேதணியாத்துயரமும்பெற்றனமே. (௩௬௨)

### பயிலிடத்தொடுபுலம்பல்.

கிளையாடகவில்லர்கோடீச்சுரேசர்கிரிதனில்வந்
திளையாடும்பூம்பொழிலேபுனமேமலரீர்ஞ்சுனையே
வளையாடுகையினளும்மொடெப்போதுவருவலென்றாள்
விளையாடத்தேடும்பேதையர்க்கோதவிளம்பிடுமே. (௩௬௩)

### நிமித்தம்போற்றல்.

மின்னார்சடையண்ணல்கோடீச்சுரமன்னமெல்லியலை
யுன்றுவெளியேன்கணையாமினிகளாவுற்றுதவிற்
பொன்னார்கலந்தனிற்பாயசநூனுமென்போனகமு
மன்னுதாவொடுனக்களிப்பேன்கொம்பில்வாழ்கொடியே. (௩௬௪)

சரம்பாலைநிலம்-பண்டிதம். முன்னவருக்கிதம்பேசினவர்.

### சுரந்தணிவித்தல்.

மேலையுறுவெங்கதிரோயெவருக்குமித்திரனே
மாலையிடங்கொண்டகோடீச்சுரேசர்வரைதனில்விற்
கோலநிகர்தருங்கண்பலர்வஞ்சிக்கொடிபடர்ந்த
பாலையைநீடுமருதமென்றேதிடப்பண்ணுகவே. (௩௬௫)

### மென்மைத்தன்மைக்கிரங்கல்.

ஆய்ந்தார்புகழ்ந்திடுங்கோடீச்சுரேசரணிவரைமேல்
வாய்ந்தாரமுதொத்திருந்திடுபேதைமலர்மிதிக்கி
லோய்ந்தாகுலமுறுமெவ்வாறுற்றாள்கடலேழும்பொங்கிப்
பாய்ந்தாலும்வெம்மைதணியாதசெந்தழற்பாலையிலே. (௩௬௬)

### இளமைத்தன்மைக்கிரங்கல்.

சோதிமுழுமுதல்கோடீச்சுரவிளந்தோகையுன்ற
ஞோதிமுடிப்பவராரங்கனமெடுத்தூட்டுவரார்
தாதிமுதலோரிலரோயென்செய்திதழற்சுரத்தி
லாதிமுடியிவ்வாறேவெழுதினனோரணனே. (௩௬௭)

அச்சத்தன்மைக்கச்சமுற்றிரங்கல்.

சொல்லுஞ்சுருதியர்கோடீச்சுரோசர்துணைமலர்த்தா *
ளல்லும்பகலுங்கருதாதவர்செல்லருஞ்சுரத்திற்
கொல்லுங்கரியுந்தழலும்வந்தையோகுறுகவெதிர்
புல்லும்பொழுதென்னென்றஞ்சுறுமோசுந்தம்பொன்னுளமே. (௩சஅ)

கொல்-பொற்கொல்லன். கரிகரி- யானை. பொன்- பொன்னொத்தமகள்.

கண்டோரிரக்கம்.

செழுவான்பணிசிவன்கோடீச்சுரத்தின்றிசைகுறித்துத்
தொழுவாள்வளர்த்தவளீன்றாளிப்பாவிதுடிக்குமெதி
ரழுவாள்வன்பாங்கிபுலம்புவர்தாதியராங்கயர்ந்து
விழுவார்கள்பாங்கியர்சென்றதின்னோர்கடம்மெல்லுயிரோ. (௩சகூ)

செவிலியாற்றுத்தாயைத்தேற்றல்.

பங்கேருகத்திருவன்னாள்பொருட்டுப்பருவாலுற்
றிங்கேவருந்திடல்கோடீச்சுரோசர்தமின்னருளா
லெங்கேயிருக்கினுமின்னேகொணர்வலிமைப்பொழுதி
லங்கேழணிபொற்றொடியாளொடுமற்றவனையுமே. (௩ருய)

ஆற்றிடைமுக்கோற்பகவரைவினாதல்.

பகையாறுவென்றைந்தடக்கியொண்ணான்மறைபாடிமுக்கோல்
வகையாக்கரங்கொண்டிருநெறியோர்தனிவந்தெதிர்ந்த
தகையார்முனிவிர்முன்கோடீச்சுரோசர்தடங்கிரிவாய்த்
திகையார்தனத்தெங்கண்மாணொருகாளைபின்சென்றதுண்டே. (௩ருக)

மிக்கோரேதுக்காட்டல்.

நனையீன்றகொன்றையர்கோடீச்சுரவெற்பினையன்மின்னே
தனையீன்றவளைவிடுத்தணிவாரிடஞ்சார்ந்திடுமுத்
துனையீன்றவளில்லினியுமுற்றாயிலையுன்மகளு
மனையளொருவன்பின்சென்றாலகியல்பாமிதுவே. (௩ருஉ)

தனையீன்றவளை-தனையீன்றசங்கம்.

நகைக்கின்றனை-அரும்புகின்றாய். கள்ளம்-வஞ்சம். அழகியதேன்

எயிற்றியொடுபுலம்பல்.

கோளாடரவணிகோடீச்சுரோசர்குவட்டின்மத
வேளாசுகவிழிபேடர்மின்னேயொன்றும்விள்ளவின்றி

வாளாவிருந்திப்பாராவதமென்மகளொருத்த
னீளாநிழல்வரக்கண்டனையோவிக்குன்றனையே. (௱௫௩)

குரவொடுபுலம்பல்.

விடத்தேசமர்கண்டர்கோடீச்சுரநம்பர்வெற்புறுமென்
மடத்தேமொழியொருகாளைபின்னுமுன்னர்வந்ததுண்டோ
கடத்தேமலர்க்குரவேநகைக்கின்றனைகள்ளமுன்ற
னிடத்தேயிருக்கின்றதுமெலிந்தேன்புகலென்றனக்கே. (௱௫௪)

கவடுகண்டிரங்கல்.

கண்டேமிருவரடியுமிக்காண்டன்னகாளைபுயங்
கொண்டேநடந்தனன்போலுமுட்காகநங்கோற்றொடியைப்
பண்டேமொழிபங்கர்கோடீச்சுரநித்தர்பைம்பொன்வெற்பி
லுண்டேயிவ்வாறுசுமந்தேகிடுசிலவும்பருமே. (௱௫௫)

கலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்.

மதனுமிரதியும்போல்வருவீரொருவார்த்தைதந்தேன்
விதனங்களைந்திடுமும்மையொப்பாரொருவித்தகனு
மிதநங்கையுமிந்நெறியேயுமக்கெதிரேகினரோ
வதநமொராந்துடைக்கோடீச்சுரேசர்வரையருகே. (௱௫௬)

அவர்புலம்பத்தேற்றல்.

அன்னையொப்பாயெதிர்நான்கண்டகாளையுமவ்விடத்திப்
பொன்னையொப்பாள்கண்டமெல்லியலாளுமிப்போதுசென்று
தன்னையொப்பாம்புகழ்ப்பொன்னியின்பாங்கர்ச்சடாடவியின்
மின்னையொப்பார்மகிழ்கோடீச்சுரநகர்மேவுவரோ. (௱௫௭)

செவிலிபுதல்வியைக்காணாதுகவலைகூர்தல்.

வன்னகவில்லான்கோடீச்சுரந்தனைவாழ்த்தினர்தந்
துன்றொளிசுரத்தெங்ஙனுங்காண்கிலன்றோகையையென்
பொன்றொடிநம்பினளோவெனுந்தாய்க்கென்புகல்வனினி
யன்னாருயிர்தரியாடரியாதென்றனாவியுமே. (௱௫௮)

தலைவிசேணகன்றமைசெவிலிதாய்க்குரைத்தல்.

நிலையாகியசெல்வமின்னேவருந்தியுநேரிழையைத்
தொலையாதவெஞ்சுரங்கானகஞ்சோலைகடுன்னியொவ்வோ
ரிலையாகத்தேடினன்காணேனவளந்தவேந்தனுடன்
சிலையானவெற்பினர்கோடீச்சுரநகர்சென்றிடுமே. (௱௫௯)

தலைவன்றம்மூர்சார்ந்தமைசாற்றல்.

தேன்வந்தகொன்றையர்கோடீச்சுரேசர்செழுஞ்சிலம்பின்
மான்வந்ததன்னமின்னேயுன்றன்மீதொருமால்களிறு
தான்வந்தெதிருற்றதவ்விடமீங்கிதுதண்புனமே
நான்வந்துனைக்கண்டகாவின்னதன்னதுநம்பதியே. (௩௬௰)

தலைவி முன்செல்வோர் தம்மோடுதான்வரல்பாங்கியர்க்குணர்வித்தல்.

முற்றாமுலைபங்கர்கோடீச்சுரத்தெனைமுன்னியிளங்
கற்றாவெனைநையும்பாங்கியர்பான்மறைகற்றறிந்த
நற்றாமரைத்தொடையீருள்ளநாண்முற்றுநன்குவிற்றா
விற்றாமவேந்தலொடுநான்வரன்முன்விளம்பிடுமே. (௩௬௧)

முன்சென்றோர்பாங்கியர்க்குணர்த்தல்.

பரந்தீண்டமுன்மின்பறிகொடுத்தோமென்றுபாவையுற்ற
சுரந்தீர்ந்தன்னொடும்பால்விளையாடற்குத்துன்னினண்முப்
புரந்தீயுறப்புரிகோடீச்சுரேசர்புகழ்வரைமே
வரந்தீட்டுவாளன்னகண்ணீர்முன்சிற்றிலமைத்திடுமே. (௩௬௨)

பாங்கியர்கேட்டுநற்றாய்க்குணர்த்தல்.

நொந்தாரம்போல்விழிநீர்சொரியேலொருநோவுமின்றிச்
சந்தாரிளமுலைகோடீச்சுரேசர்தமதருளால்
வந்தாளிறைவனொடுமீண்டெனச்சிலர்வந்துமொழி
தந்தாரன்னேயின்றுதான்பயந்தாயந்தத்தையலையே. (௩௬௩)

நற்றாய்தலைமகனுளங்கோள்வேலனைவினாதல்.

நாலாரணன்பணிகோடீச்சுரேசர்தங்காட்டிலுறு
வேலாவுனையொன்றுகேட்கலுற்றேன்சுரமீண்டுவருங்
கோலாகலன்மின்னையென்மனைக்கேயுறக்கூட்டிடுமோ
பாலாகியதன்மனையுக்குபோவெண்ணிப்பார்த்துரையே. (௩௬௪)

நற்றாய்மணனயர்வேட்கையிற்செவிலியைவினாதல்.

பொன்மலர்ச்செஞ்சடைக்கோடீச்சுரேசனைப்போற்றிறைவன்
றன்மனைப்பான்மின்னைக்கொண்டேகினுமவன்றாயொடுநா
முன்மனைப்பான்முற்சிலசடங்காற்றிமெல்லோதிதனக்
கென்மனைப்பான்மணஞ்செய்திடச்செய்கென்றியம்புவமே. (௩௬௫)

செவிலிக்குக்கிளைவந்தமையுணர்த்தல்.

தகாத்தனிவரியாறைந்தினர்வந்துசாற்றினர்தந்
நகரத்திலேதந்தமர்சூழமன்றனவின்றனராம்

பகரத்தலைவர்நம்மொண்ணுதலாட்கியல்பாங்கினொடு
மகரத்தடங்குழைக்கோடீச்சுரேசர்வரையனையே. (௩௬௬)

தகரவரி-ஆறைந்து, முது.

வரைந்தமைசெவிலிநற்றாய்க்குணர்த்தல்.

மாதிவணீமுன்புகோடீச்சுரேசர்வரத்திற்பெற்ற
பாதிரியோதுபருதியினுப்பண்பகிருசொல்
லாதியுமீறும்புணர்பேர்முன்னுகினளவ்வரச
னேதிடுமற்றையதானுன்மணந்தங்களுரிழைத்தே. (௩௬௭)

மாதிவணீ-மாதேயிங்குநீ. பாதிரிபருதி. இவ்விரண்டினது - திரு-இவ்வி
ரண்டினுதியுமந்தமும் புணர்ந்தபேர், பாரி, பதி.
திரு, பாரியானுள்.அவன் மற்றையதாகியபதியானுன்.

தலைவன்பாங்கிக்கியான்வரைந்தமைநுமர்க்கியம்பென்றல்.

கந்தணந்தாதைதென்கோடீச்சுரமன்னகன்னிமுன்பு
தந்தனண்மாலையெமக்கின்றெம்மாலையைத்தன்கழுத்திட்
டந்தணநீடுமெம்மூர்மன்றலாற்றியனையபளொடு
வந்தனம்வந்தனஞ்செய்வானுமர்க்குரைவானுதலே. (௩௬௮)

பாங்கிதானதுமுன்னேசாற்றினேனென்றல்.

மால்பற்றிடத்தினர்கோடீச்சுரவரைவாழெபர்க்குப்
பால்பற்றியநுமர்தம்முன்புநீமணப்பந்தரின்மின்
கால்பற்றியதுமென்மந்திரமோதிக்கைபற்றியதூஉம்
வேல்பற்றியமன்னமுன்னேயுரைத்தேன்மிகமகிழ்ந்தே. (௩௬௯)

நீங்குங்கிழத்திபாங்கியர்க்குத்தன்செலவுணர்த்திவிடுத்தல்.

இல்லத்தும்பாலுறநெஞ்சோதிற்றன்னதையேலுங்கற்பு
மெல்லத்தழைத்தேகவிற்போவலென்வேந்தர்பின்னென்
றெல்லத்துடியிடைப்பாங்கியர்க்கென்செலவோதிச்சென்மின்
சொல்லத்தகையரன்கோடீச்சுரவெற்பிற்றூயவரே. (௩௭௰)

தலைவிதன்செலவின்றாட்குரைத்துவிடுத்தல்.

சேவையுகைப்பவர்கோடீச்சுரேசர்சிலம்பிலென்றன்
பாவையெங்கேகினளென்றழுந்தாய்க்கென்பணிவுரைத்துக்
கோவைவிரும்பியுடன்போதலுஞ்சொல்லிக்கூட்டுறுமென்
பூவையைப்போற்றச்சொன்னேனென்றுமோதுமின்பூசுரரே. (௩௭௧)

நற்றாய்க்கந்தணர்மொழிதல்.

தெள்ளம்புலிபுனைகோடீச்சுரேசர்சிலம்பிடத்து
வெள்ளம்வருமுனமேகோவிடாததுமேற்பட்டபோ
துள்ளமுருகியென்கண்டேமுன்பெண்ணையங்கோதுமொரு
வள்ளல்பின்சென்றாள்வருவாள்சின்னாளின்மனைக்கணங்கே. (௩௭௨)

தமர்பின்சேறலைத்தலைவிகண்டிரங்கல்.

ஆனவிதற்கென்னசெய்வோமிறையையருக்கனைமேற்
றானவர்சூழ்ந்திடுமாறெனப்போர்செயத்தாவிநந்தங்
கானவர்சூழ்ந்தனர்வில்லம்புவேல்வளைகைப்பிடித்து
வானவர்சூழ்ந்திடுகோடீச்சுரநம்பர்மால்வரைக்கே. (௩௭௩)

தலைவன்றலைவியைவிடுத்தல்.

தேனேற்றகோதைவனவேடரோவொருதிண்கணையில்
வானேற்றுவேனிவராவியெல்லாநுமர்வந்தனரோ
லானேற்றினர்திருக்கோடீச்சுரேசரணிவரைக்க
ணானேற்றிடாதகல்வேனீயவர்பின்னடந்தருளே. (௩௭௪)

தமர்பின்செல்பவளவன்புறநோக்கிக்கவன்றரற்றல்.

வெற்றிகொள்வேந்தர்தென்கோடீச்சுரம்வாழ்விமலர்வெற்பிற்
குற்றியன்மேவிடுகரமுன்னோருயிர்கூடுறுங்கா
லொற்றியமெய்விட்டகல்வதினம்மையிங்குய்த்தகன்றார்
பற்றியவேடர்வரனைக்கிநம்மேற்பரிவிதுவே. (௩௭௫)

வரைந்துழிக்கண்டோர்மகிழ்ந்துரைத்தல்.

அன்றியல்வள்ளிசெவ்வேண்மணநோக்கினமாங்கதன்பி
னின்றிவர்செய்ம்மணங்கண்டோமிவைமற்றிரண்டினுமே
நன்றவர்பேதையர்மன்றல்கண்டோர்விழிகொண்டதின்ப
மொன்றிருமூன்றுகட்கோடீச்சுரவள்ளலோங்கலிலே. (௩௭௬)

தலைவன்றலைவிமுன்பாங்கியைப்புகழ்தல்.

கால்செய்தகொன்றையர்கோடீச்சுரேசர்கதிர்வரைமேற்
றேன்செய்தனவித்திருவின்பநானுறச்செய்யுனக்கு
நான்செய்திடுநன்றிகாணேன்கதிர்முலைநன்னுதலாய்
வான்செய்தநன்றிக்குலகோரியற்றுங்கைம்மாறிலையே. (௩௭௭)

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

இங்கடியேற்குமுகமனென் னேமன்னவென்றனையு
மெங்குலத்தோடிந்தமின்னையும்போற்றினையின்னளொடு
திங்களங்கண்ணியர்கோடீச்சுரந்தனிற்செந்திருவும்
பங்கயக்கண்ணனும்போல்வாழ்தியென்றும்பலனுறவே. (௩௭௮)

தலைவியைவரையுநாளளவும்வருந்தாதிருந்தமைவினாதல்.

இமையாதிருத்தியிமைக்கிற்பிரிவென்றிறைவர்முன்னின்
றுமையாளிடத்தினர்கோடீச்சுரேசருயர்வரைப்பா
லமையார்புயத்தாயனைகாப்பினுமீடருந்தனத்துக்
கெமையாளிவர்தம்பிரிவினுமெவ்வாறிருந்தனையே. (௩௭௯)

தலைவிவருந்தாதிருந்தமைகூறல்.

சிதம்பயில்வேந்தருள்கோடீச்சுரநகர்த்தேவர்பிரான்
பதம்பணியாரழற்கண்போலிருந்துபனிக்கதிரோன்
வதம்புரிதென்றல்பைங்கன்னல்வில்வேளினைமாற்றியெனக்
கிதம்பண்ணியவதனாற்றுயர்காண்கிலனேந்திழையே. (௩௮௰)

பாங்கிதலைவனைவருந்தாதிருந்தமைவினாதல்.

மையமர்கண்டர்தென்கோடீச்சுரமன்னமன்னவெழிற்
செய்யுறுமிந்தமடவன்னமின்றிமுன்செஞ்சிலைவே
ளையம்புகுபொழுதெவ்வாறுநீவந்தடர்தலுறு
வெய்யவிரகப்பசிபொறுத்தாய்சொல்விளங்கிடவே. (௩௮௧)

பாங்கிசெவிலிக்கிருவரன்புமுணர்த்தல்.

வேலுறழ்கண்ணிக்குமேந்தற்குமெய்யுருவேறிவர்க
ளோலுறுமாவியுமுள்ளமுமன்புடனின்புமொன்று
மாலுறுபாகத்தர்கோடீச்சுரத்தெங்கண்மன்னுமுயிர்
போலுறுமம்மனைநோக்கிடிங்கின்னதுன்புண்ணியமே. (௩௮௨

பாங்கியில்வாழ்க்கைநன்றென்றுசெவிலிக்குணர்த்தல்.

வன்புற்றரவணிகோடீச்சுரேசர்வரையிலுன்பெண்
மென்புத்தனம்விருந்தோர்க்கூட்டியேந்தற்கும்வேண்டியிட்டங்
கின்புற்றுப்பின்றுயில்கூர்ந்துமுன்காலையெழுந்திறைஞ்சி
யன்புற்றிடுமனைவாழ்க்கையின்மேலவளாயினளே. (௩௮௩)

செவிலிதலைவிகற்பியனற்றாய்க்குரைத்தல்.

வாலியனீற்றரன்கோடீச்சுரந்தனில்வாழ்ந்திடுநம்
பாலியற்சொல்லியிறைமீதுவைத்தபரிவுமவண்
மேலியற்கற்பும்பொறையுமுன்னோர்ந்திடுமேதினியோர்
சாலியப்பெண்ணெனக்கூறுகின்றார்மலர்த்தாழ்குழலே. (௫௮௪)

செவிலிமனைவாழ்க்கைத்தன்மையுரைத்தல்.

மறியார்கரத்தரன்கோடீச்சுரத்துநம்வாணுதலாள்
வறியார்க்கிரங்கலறங்காத்தலின்சொன்மருவுறுதன்
னெறியார்பொருட்குத்தகவேயழித்தனிகழ்பிறவு
மறியாநடக்குமனைவாழ்க்கையினன்கமைந்தனளே. (௫௮௫)

செவிலிநற்றாய்க்கிருவர்காதலுமுரைத்தல்.

சந்திரசேகரர்கோடீச்சுரமன்னதையன்மின்னை
தந்திரமாகத்தன்காதலைக்கேள்வர்தமக்களித்து
மூந்திரவாதவர்காதலைத்தான்கொண்டமோகத்தவ
ரொந்திரத்தேரொங்ஙனேகினுமாலையிலீண்டுறுமே. (௫௮௬)

காதலன்பிரிவுழிக்கண்டோர்புலவிக்கேதுவிதாமிறைவிக்கென்றல்.

ஆடகவில்லரன்கோடீச்சுரத்திந்தவண்ணலந்த
நாடகம்பாட்டியலுட்கோளபிநயநாடிவிழைந்
தேடகப்பூங்குழல்வேசையிற்கேகிடுமீதிறைவி
யூடகமிக்கபுலவியின்காரணத்துற்றிடுமே. (௫௮௭)

தனித்துழியிறைவிதுனித்தழுதிரங்கல்.

வினைத்துயர்தீர்த்திடுங்கோடீச்சுரநம்பர்வெற்பிலுல
கனைத்தையும்வெல்வேள்கலகத்திலிந்தவமளியிலே
யெனைத்தனிவைத்துப்பிறரிலங்காத்நறகிறைவர்சென்றார்
கனைத்துறுதென்றலுந்திங்களும்வந்துனைக்காக்குமென்றே. (௫௮௮)

ஈங்கிதுவென்னெனப்பாங்கிவினுதல்.

இரவியெழுந்துமிருளேதிமையவரிந்திரன்மால்
பரவிவணங்குதென்கோடீச்சுரவள்ளல்பைம்பொன்வெற்பிற்
குரவிவருங்குழன்மானேமகிழ்ந்துகொழுநருண்கண்
விரவியிருந்திடுநாளின்னலேதுவிளம்புகவே. (௫௮௯)

இறைமகன்புறத்தொழுக்கிறைமகளுணர்த்தல்.

பதுமாதனன்பணிகோடீச்சுரேசர்பனிவரைவாழ்
விதுமாமுகிசென்றுசென்றுபல்போதினும்வீழ்ந்துவரி
மதுமாந்திடுதலின்மாலாயென்னின்பமருவினவர்
பொதுமாதரின்புமுறலகன்றூர்கண்ணன்போக்கறிந்தே. (௩௯௰)

தலைவியைப்பாங்கிகழறல்.

பணவரவம்புனைகோடீச்சுரேசர்பனிவரைப்பொன்
னணவரம்பைக்கிணையூருமன்வேசையர்க்காசைகொண்டார்
மணவரத்தாரன்பரொன்றிகழேல்குலமாதர்மின்னே
கணவரதேதமெடுத்தோதன்யாண்பன்றுகற்பினுக்கே. (௩௯௧)

செவ்வணியணிந்துசேடியைவிடுப்புழி யவ்வணியுழையர்
கண்டழுங்கிக்கூறல்.

முன்னேவறிதிலிகழ்வார்கள்வீதியிம்மொய்குழலாள்
கொன்னேபவளமுஞ்செஞ்சாந்தும்வெட்சியின்கொத்துமணிந்
தென்னேபடர்தனம்மின்னிலைகாட்டற்கிசைந்ததன்றீ
தன்னேர்மிடற்றினர்கோடீச்சுரமென்னணிநகர்க்கே. (௩௯௨)

பரத்தையர்கண்டுபழித்தல்.

மாமலர்க்கொன்றையர்கோடீச்சுரத்துறுமாதகத்திற்
பூமகளாயதவடன்னிறையும்புறத்தெவருந்
தாமறிவுற்றிடத்தானுமப்பூமகடானெனவே
காமருசெந்துகில்பூண்டனளோவிந்தக்காரிகையே. (௯௯௩)

பரத்தையருலகியனோக்கிவிடுத்தல்.

கருந்திருக்கண்டர்தென்கோடீச்சுரத்துன்மடிமனையிற்
பொருந்தியமுல்லைக்கொடிபூத்ததாகப்புகன்றனர்கள்
பெருந்திறன்மன்னவநீயேகிநோக்கிப்பெருமகிழ்வுற்
றிருந்துசின்னாள்பின்னர்வந்தருள்வாயிவணென்மனைக்கே. (௩௯௪)

தலைவன்வரவுகண்டுவந்துவாயில்கண்மொழிதல்.

ஐயாவடியுற்றுநால்வர்க்குமுப்பொருளன்பினொடு
கையாலுணர்த்தரன்கோடீச்சுரமன்னர்காரிகையின்
மெய்யார்ந்தசெவ்வணிகண்டுடன்மீண்டனர்மென்குறிப்புச்
செய்யாமுன்னோர்வோர்க்குரையாற்பயனென்னைதேமொழியே. (௩௯௫)

தலைமகன்வரவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

அருளூற்றமெய்யரன்கோடீச்சுரமன்னவாயிழையா
யிருளூற்றிடவிப்படிபுறம்போனவிரவிவரிற்
றெருளூற்றுவகையுறுமெவர்வேந்தர்தெருவில்வந்தார்
மருளூற்றிடாதெதிர்கொண்டேத்தியில்லம்வரவழையே. (௩௬௬

தலைவியெதிர்கொண்டுபணிதல்.

கனம்வந்தனகண்டார்கோடீச்சுரத்துனைக்கண்டவுடன்
றனம்வந்ததென்றுகளிகூர்மடந்தையர்தம்மைவிட்டு
மனம்வந்ததோவிங்கெளியேனிருக்குமனைவரவித்
தினம்வந்தனந்தருகின்றனன்கோடிதிறலரசே. (௩௬௭)

புணர்ச்சியின்மகிழ்தல்.

மாலையன்போற்றரன்கோடீச்சுரமின்வழங்கியவிவ்
வேலையிலின்றிங்கொருவலைவீசிவிரவிடொரு
சேலையுட்பற்றினமோர்பணம்விற்றனஞ்செங்கையுற்ற
தாலைவில்வேட்குங்கிடையாதிவ்வேலையவனியிலே. (௩௬௮)

ஒருவலைவீசி-நீங்காதலைவிட்டு. சேலை-மீனை. பணம்-படம்போன்றவல்குல். விற்றனம்-ஒளியுற்றமுலை, விற்ரும்.

வெள்ளணியணிந்துவிடுத்துழித்தலைவன்வந்துபாங்கியைவேண்டல்.

எள்ளருஞ்சீரரன்கோடீச்சுரத்துணதேவலினுல்
வெள்ளணிபூண்டுவருமாதைக்கண்டிங்குமேவினன்மேற்
கள்ளவிழ்கோதைமலர்த்திருமாதைக்கலந்திடச்செ
யுள்ளளவும்மெனைவாடாதுகாத்தருளொண்ணுதலே. (௩௬௯)

தலைவிநெய்யாடியதிருவோசாற்றல்.

பாலாழிதிங்கட்பயந்தாங்கெழின்மகப்பங்கயத்தின்
மேலாளனமாதுயிர்த்துநெய்யாடினள்விற்றிகிரி
மாலானவர்க்கருள்கோடீச்சுரேசனைவாழ்த்துமெங்கள்
கோலாகலவின்றென்னுலாவதிங்கெவன்கூறுகவே. (௩௭௦)

தலைவன்றன்மனத்துவகைகூர்தல்.

வேணியிலாற்றினர்கோடீச்சுரந்தனில்வீற்றிருக்கும்
வாணிகர்கண்ணிதன்பாலார்முலையுநெய்வார்குழலும்
பாணியிற்பாலனுமேனியினீடுபசுநரம்புங்
காணியவென்னதவஞ்செய்தனஞ்சென்றகாலத்திலே. (௩௭௧)

தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.

ஊற்றுமணலெனத்தன்னடிக்கென்னெஞ்சுருகிடச்செய்
கோற்றொடிபாகன்றென்கோடீச்சுரமன்னகூர்விழியாய்
பாற்றினஞ்சூழ்வடிவேலார்நரகப்படுகடலின்
றேற்றக்கரைசேர்மதலையைநோக்குதற்கெய்தினரே. (௬௨)

மதலை-பிள்ளை, தோணி.

தலைவியுணர்ந்துதலைவனொடுபுலத்தல்.

புரத்தையெரித்தவர்கோடீச்சுரம்வாழ்புகழிறைவ
பரத்தைநம்புற்றவற்கின்டென்னகாரியம்பற்றிமெவ்
வுரத்தையுறும்பலம்போற்கிடையாதிங்குறும்பயமென்
கரத்தைவிடுவிடுதானையையீதென்னகைதவமே. (௬௩)

தலைவிபாணனைமறுத்தல்.

சேணையுறுபுகழ்க்கோடீச்சுரேசர்சிலம்பினடன்
வீணையிசைக்கவந்தாயினுகேட்டிங்குவெச்சுவநார்
நாணையிகழ்ந்ததனுவினுக்காமிந்நரம்பிசைநீ
காணையிற்சேடிவெகுளுமுன்பாணகடிதகலே. (௬௪)

நாணிழந்ததனு-நாணில்லாதமெய்யுடையவேசை. காணையில் - காணும் வேல். அதுவேல்போன்றகண்.

வாயின்மறுக்கப்பட்டபாணன்கூறல்.

வின்மால்வரைச்சிவன்கோடீச்சுரந்தனில்வீற்றிருக்கும்
வன்மால்களிற்றண்ணலுன்பேருவாத்திடின்வையகத்தோர்
பொன்மாரிதூசுமணிமாரியாரப்பொழிவர்பெருங்
கன்மாரிபெய்தனளெம்பெருமாட்டிகறுத்துநின்றே. (௬௫)

விறலிவாயின்மறுத்தல்.

அப்புறுவேணியர்கோடீச்சுரேசரசலத்திலேனூர்
கொப்புறுவீணைகொடுபாடுபாடினிகூறுமிது
தப்புவெங்காடியுந்தேனுவின்பாலுஞ்சருக்கரையு
முப்புங்கொணச்செல்காவலர்க்கிசையுன்னிசையே. (௬௬)

பாங்கிவாயின்மறுத்தல்.

அகவினைதீர்த்தருள்கோடீச்சுரேசரடிபணிந்தோர்
மகவருளென்றுங்கிரந்தவர்சூளையர்மாலிற்சிக்கித்

தகவுறுமச்சேய்தவழ்ந்ததுநோக்கிலர்தன்மழலைச்
சுகமொழிகேட்கிலர்கின்றாரின்றுற்றதென்சொல்லணங்கே. (௪௱௭)

விருந்தொடுவந்துழித்தலைவிபொறுத்தமைகண்டுதலைவன்மகிழ்தல்.

தம்மைநிகர்பவர்கோடீச்சுரந்தனிற்றண்பிறைநேர்
செம்மைநுதற்கணேறிம்மாதுதன்மைச்சிலையிணையுங்
கொம்மைமுலைவேசையர்க்காப்படர்க்கைகொடுமையங்கு
நம்மையுமுன்னிலைசேர்த்திட்டதுற்றவிந்நல்விருந்தே. (௪௱௮)

பள்ளியிடத்தழுங்கல்.

அறங்காட்டுசொல்லரன்கோடீச்சுரமன்னவாயிழைநின்
றிறங்காட்டிகல்கொண்மணாளர்வந்தாலெதிர்தேர்செலுத்தி
மறங்காட்டுவேழமுலைத்தாடல்செய்யமதித்தல்விட்டுப்
புறங்காட்டுதலென்னவீரங்கொலோவிந்தப்பூவகத்தே. (௪௱௯)

சீறேலென்றவள்சீறடிதொழுதல்.

கானலைநீயொன்றலையுற்றமான்வரிநாசினியில்
வானலைவெள்ளம்வெதுண்டிடுமோமுன்வரலெனவே
மானலையுற்றேன்பிழைபொறுத்தாளென்றன்வந்தனங்கோ
ஞானலைசூலத்தர்கோடீச்சுரமன்னவொண்டொடியே. (௪௱௰)

இஃதெங்கையாகாணினன்றன்றென்றல்.

வையுறுஞ்சூலத்தர்கோடீச்சுரத்தென்கண்மன்னவநீ
செய்யும்வணக்கமம்மாதர்கண்டாலங்ஙன்சேரவொட்டார்
மையலடைந்துபின்னன்னவர்தம்மனைவாயினின்று
கையிலிருந்தனமுமிழந்துகலங்குவையே. (௪௧௧)

அங்கவரியாரையுமறியேனென்றல்.

தேங்கமழ்கொன்றையர்கோடீச்சுரேசர்சிலம்புறுதே
மாங்கனியார்ந்துசுகமாவிருந்திடுவண்கிளிபோய்
வேங்கருங்கானத்திடைக்காஞ்சிரங்காய்மிசைந்திடுமோ
பாங்கரும்பாழலைநானறியேனொருபாவமுமே. (௪௧௨)

காமக்கிழத்தியைக்கண்டமைபகர்தல்.

வேயிருட்கண்டர்தென்கோடீச்சுரமன்னவீதியிலுன்
சேயினைப்பற்றிமுலைமேலணைத்தனள்சென்றனளோ
ராயிழைபார்த்ததையோர்மாதொருத்திக்கவன்சிறிய
தாயிவளென்றனளெருமறிந்ததுன்றன்களவே. (௪௧௩)

தலைவியைப்பாங்கிநனித்தல்.

இலவினிதழ்ச்செய்யவாய்மங்கையுப்பமைந்திட்டதுபோற்
புலவியதுமிகுந்தற்றுகூட்டிடல்பொன்மலர்த்தார்
நிலவிடுவார்சடைக்கோடீச்சுரேசர்நெடுங்கிரிமேற்
பலவின்புகழ்மன்னருன்றன்பணிந்தனர்பார்த்தருளே. (௪௧௪)

தனியாளாகத்தலைமகனூடல்.

வாமான்கரன்கொண்டகோடீச்சுரேசர்வரையிலிவண்
மாமால்கரிமுன்னும்பூவார்சுனையினும்வந்தெனைநீ
காமாநிலயன்னவென்றதக்காலமிக்காலநெஞ்சே
நாமாரிவட்குநமக்கிவளார்விடுநட்பினையே. (௪௧௫)

பாங்கிதலைவனையிகழ்தல்.

முன்னாள்விருப்பினைப்பொன்னுடனீந்துமுருகருந்து
மின்னார்க்கவரிடைவேறுமணமும்வெகுளியுங்கொண்
டென்னாரமுதினைச்சீறுகின்றாய்புனக்கிழவன்
றென்னுணைவெல்விடைக்கோடீச்சுரேசர்வெற்பீபாங்கரசே. (௪௧௬)

ஆயிழைமைந்தனுமாற்றமையும்வாயிலாகவரவெதிர்கோடல்.

கந்தனையீன்றவர்கோடீச்சுரத்துறுகாவலர்நீர்
மைந்தனைத்தோட்கொண்டுதந்திரமாவிங்குவந்தடைந்தீர்
நிந்தனைமாதர்மயக்கிடையென்றனினைவுமக்கு
வந்தணைவுற்றதுசிந்தனைசெய்திடன்மாவியப்பே. (௪௧௭)

புணர்ந்தவன்போயபின்பாங்கியொடுதன்மகனைப்புகழ்தல்.

மருப்பயில்கொன்றையர்கோடீச்சுரத்துமறுகினிடை
யிருப்புறுவேசையிற்கேகுறுந்தோன்றலிரந்தனைத்
திருப்பினன்சேணின்றுநம்மனைவாயுறச்செயிவன்றன்
விருப்புறக்கற்றசெங்கோவலவந்தொழின்மெல்லியலே. (௪௧௮)

தலைவிதலைவனைப்புகழ்தல்.

சக்கரமாற்கருள்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பர்
புக்கதிற்போகவிலைமாதரில்லிடைப்போகவிலைத்

தொக்கநம்பால்வைத்தகாதலிந்நாண்மிகத்தோன்றியது
மிக்கவர்நேசமிடையூறுறுதென்றன்மெய்யணங்கே. (௪௧௯)

பாங்கிதலைவியைப்புகழ்தல்.

திருந்திழைபாகர்தென்கோடீச்சுரேசர்செழுஞ்சிலம்பிற்
பொருந்துமிவ்வஞ்சியருள்பூத்திறைஞ்சியான்புரிபிழைமிக்
கிருந்ததையெண்ணிமுன்காபாதுபலனீந்ததரு
லருந்திறற்கற்புக்கரசியென்றோதிடுமம்புவியே. (௪௨

கல்விக்குப்பிரிவுதலைவன்பாங்கிக்குணர்த்தல்.

செல்விவளர்திருக்கோடீச்சுரேசர்செழுங்கிரிமேற்
சொல்விறலுற்றவறமுதனான்குந்தொகவியற்றும்
பல்விதமானபுகழ்நல்கும்வேந்தர்பரவச்செயுங்
கல்வியழகேயழகாமெவருக்குங்காரிகையே. (௪௨௧)

கல்விப்பிரிவுபாங்கிமறுத்தல்.

நிறந்தருகுலத்தர்கோடீச்சுரர்வாழ்கிருபசென்று
சிறந்திடுகல்விகள்வேண்டிவையாவையுந்தேர்ந்துபின்னா
றிறந்தபின்றொன்பையன்றார்களாகவியற்றுதற்கோர்
திறந்தருவிஞ்சையுங்கற்றறிகாணவுன்செல்வியையே. (௪௨௨)

தலைவனுடன்படுத்தல்.

கடமாவுரிபோர்த்தினர்முகில்சூழுங்கதிர்ப்பவளத்
தடமால்வரைபுரைகோடீச்சுரேசர்தமிழ்வெற்பிலோர்
மடமானையென்றனக்கீந்தாயம்மாவொடுவாழ்ந்திடநான்
றிடமார்கலையிறையாயினனென்றேகவின்சேயிழையே. (௪௨௩)

கல்விப்பிரிவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

வெற்றிகொண்மால்விடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பனைய
மற்றிணிதோளுடைச்சுந்தரரானநம்மன்னவர்நூல்
பற்றிவேர்க்கரசாகிமெய்ஞ்ஞானசம்பந்தர்பதம்
பெற்றிடவெண்ணிப்பிரிந்தாரின்றேதப்பிறைநுதலே. (௪௨௪)

தலைவிகார்ப்பருவங்கண்டுவருந்தல்.

கல்விக்கடலைப்பருகிவந்தீண்டுக்கவிமழைதன்
சொல்வித்தகமுறப்பெய்வதற்கேகினர்தோன்றுமுன்னிச்

தலைவிமுன்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

முன்பனியெங்கும்புகைபோற்பரந்தது முன்னமனும்
வன்பனிதன் கண்மறைந்தென்றனுருயிர்வாங்கவரு
மன்பனில்காலத்தவனெடெவ்வாறமராற்றுவல்பே
ரின்பனிராகுலன்கோடீச்சுரேசனிமவனைக்கே. (௬௩௧)

தோழியாற்றுவித்தல்.

அசைஞாயிறுதிங்கட்கண்ணான்செவ்வாயினனற்புதன் விண்
மிசைவாய்புகழ்த்திருக்கோடீச்சுரவண்ணல்வெற்பிடத்தி
லிசைவாவியாழஞ்சொல்வெள்ளியற்கோற்றொடியிப்பொழுதுன்
னசைவாய்ந்துபொய்வசனியாதமன்னிங்குநண்ணுறுமே. (௬௩௨)

இசையுற்றயாழ்-வெள்வளை. பொய்வசனியாதமன்னன். நசை- ஆசை.

துணைவயிற்பிரிவுதலைவனுலுணர்ந்ததோழி தலைவிக்குணர்த்தல்.

வானூர்மதிச்சடைக்கோடீச்சுரேசர்வரையிடத்தி
லூனூர்வடிவேலிறைவரோர்வேந்துக்குதவியுறப்
போனூர்வடகின்றுன்னன்பர்வந்தார்துணைப்போயெனநீ
நானூர்தரவருவேனெனவோதிநறுநுதலே. (௬௩௩)

தலைவிபின்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

காலனைக்கால்கொண்டுதைத்துயிர்வாட்டிக்கலங்கிடொரு
பாலனைக்காத்தவர்கோடீச்சுரத்திற்பரவைவிடம்
போலணைபின்பனியாலென்றனுருயிர்போதலுநின்
மேலனைபோலுமின்னேபழிவேந்தனைமேவிடுமே. (௬௩௪)

துணைவயிற்பிரிவிற்றோழியாற்றுவித்தல்.

நீடல்லெனுங்கண்டர்கோடீச்சுரமன்னநேரிழையோ
ரடலைற்காவந்துறைமேவிடரசையெண்ணிக்
கூடலைப் பார்த்துறுசெல்லையுநோக்கிக்குலவுமணம்
வாடலவற்கிறைவெற்றியங்கிந்தின்றுவந்திடுமே. (௬௩௫)

தலைவன்பொருட்பிரிவுபாங்கிக்குணர்த்தல்.

பொன்னேயெனுமுன்னவசமுற்றேல்லைப்புறந்தடவி
யென்னேயெனப்பின்விழித்தெழுந்தெங்குற்றதித்துணைநாள்

கொன்னேயென்றுட்கென்பொருட்பிரிவென்னெனக்கூறுவனீ
மின்னேயெதிர்புகல்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்தே. (௯௰௬)

பொருட்பிரிவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

படுவொன்றறம்பொருளின்பெனுமூன்றனுட்பாங்கிரண்டு
நடுவொன்றுளதெனிலுண்டாமென்றோதிநலந்தருமா
வடுவொன்றிரண்டுவகிரன்னகண்ணிமகிழ்நர்சென்றார்
கடுவொன்றுகந்தரர்கோடீச்சுரேசர்தண்கார்வரைக்கே. (௯௰௭)

தலைவியிளவேனில்கண்டுவருந்தல்.

மென்மலர்க்கொன்றையர்கோடீச்சுரத்திளவேனில்கொண்டு
துன்மதவெண்குடையானந்தநீள்கடற்றுந்துபிப்போர்
மன்மதன்றூதுவளர்கோல்விசையமருவவரு
மென்மனம்வாடுமிங்கிதறியார்பொருட்கேகினரோ. (௯௰௮)

பாங்கியாற்றுவித்தல்.

கங்கைகொள்வேணியர்கோடீச்சுரேசர்தண்காவிரிநாட்
டங்கயமுனைமுலைத்தென்குமரியனநடையா
யிங்கினிச்சிந்துநன்கோதாவரியுறையீர்ந்தொடையார்
தங்கவருகின்றனர்வேனில்கண்டுதளர்ந்திடலே. (௯௰௯)

கயமுனை-முலையானையொடுபகைக்குமுலை.

தலைவனுருவுவெளிப்பாடுகண்டுசொல்லியது.

பொன்னுறுமேனியர்கோடீச்சுரேசர்பொருப்பிலொரு
மின்னுறுகின்றததிலேபிறையும்வியன்குமிழும்
பன்னுறுவில்லுங்கணையுங்கமலப்பருமுகையு
மென்னுறுபார்வைமுன்னெங்குமுந்தோன்றுமிதென்வியப்பே. (௱)

ஊர்வந்ததலைமகன்பாகற்குச்சொல்லியது.

மலைவளைகையினர்கோடீச்சுரம்வாழ்வலவமுன்வா
னிலைவளர்மாதவிகைத்திறங்கேட்டுளனீடதன்பி
னுலைவறுசீர்நளன்செய்கையுண்டேனின்றைக்குன்கைகண்டேன்
சிலைநுதல்பாலென்மனத்தின்முன்றேர்வரச்செய்தனையே. (௱௧)

பாங்கிதலைவன்வந்துழிமகிழ்ந்துரைத்தல்.

மின்னிற்கிளர்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்புறுநின்
பொன்னிற்குப்பொன்னுமணிக்குமணியும்புரவலனீ

மன்னிற்குளெங்குநிறைத்தாய்கொணர்ந்துமகிழ்வினினிக்
கன்னிக்குயின்மொழிதுன்னுமில்வாழ்க்கைகணந்தருமே. (௪௪௨)

தலைமகளோடிருந்ததலைவன்கார்ப்பருவங்கண்டுசொல்லியது.

புறத்தாழ்மென்பூங்குழற்பொன்னிடைவந்துபுணர்தலுற்றேன்
றிறத்தார்மழுப்படைக்கோடீச்சுரேசர்செழுமிடறு
நிறத்தாட்சிலம்புசடையருளாமெனநீயினிமெய்
கறுத்தார்த்துமின்னிப்பொழிமழைநாளுங்கனமுகிலே. (௪௪௩)

கோடீச்சுரக்கோவை

முற்றிற்று.

